# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - மார்கழி - 2017 - டிசம்பர்

66



கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர்
மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் அவர்களுடன்
கோவிலூர் மடாலய அலுவலர்கள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – மார்கழி – 2017 – டிசம்பர் இதழ் – 66

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்


KOVILOOR ANDAVAR
A. No. 66
LIBRARY, KOVILOOR

# இறை வணக்கம்

தென்பொதிகைச் சந்தனத்தின் நறுமணத்தில்
திளைத்தெழுந்த திகழ்மணத்தைவாரி உண்டு
தெய்வநிலை கொண்ட திருநெல்லை யென்னும்
திருநாமம் கொண்டவளாய்த்திகழும் தாயே

மன்பதைக்குக் காவலென மாநிலத்தில்
வந்தவள்நீ சாம்பவியே மணியே எங்கள்
மாதனமே மதுரைநகர்க் கரசி யாகி
மாணிக்க முடிகவித்த மாதேவண்ணப்

பொன்பதித்த சுந்தரனை மருவுகிற மலைமகளே
பொற்கொடியே அற்புதமே கழனிவாயில்
பொருந்துமிள நகையாளே அரவ ணிந்தான்
போற்றுதிரு நெல்லையெனப்பூத்த தாயே

உன்பதியாம் கொற்றவனை உளங்கொண்டு பணிகின்ற
உத்தமராம் சாதுக்கள் உள்ளந்தேடி
உவந்துவரும் உத்தமியே இன்றுநாங்கள்
உன்னடியில் தலைவைத்தோம்உவந்து காக்க!

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

66

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

காலங் காலமாக, பல பிறப்புகள், இறப்புக்கள் வழியாக ஒரு ஜீவன் செய்த நற் செயல்கள், தீய செயல்கள் அதன் வழியாக வரப்பெற்ற பாவ புண்ணியங்களை மூன்று வகையாகப் பிரிப்பார்கள். ஆகாமிய கர்மம், ப்ராரப்த கர்மம், சிஞ்சித கர்மம் எனப்படும்.

ஆகாமியம் என்பது இந்தப் பிறவியில் நாம் செய்யும் செயல்களால் கர்மங்களால் சேர்க்கப்படுகின்ற வினைகள். பிராரப்தம் என்பது முற்பிறவிகளில் நாம் செய்து சேர்த்த வினைகள் நம்முடனேயே தொடர்ந்து வருகின்ற நம் தொடர் பிறப்பிற்கு மூல காரணமான வினைகள்.

நீண்ட நெடுங்காலமாக ஏற்பட்ட சஞ்சிதம் என்பது பலப்பல பிறப்புக்களில் ஒரு ஜீவன் சேர்த்த கர்ம வினைகள் (நாம் செய்யும் செயல்களால் விளையும் நல்வினை, தீவினைகள்) நெடுங்காலமாகச் சேர்ந்ததனால் அடிப்பாகத்தில் தங்கி இறுகிவிட்ட வினைகள் சஞ்சிதம் எனக்கூறப்படும்.

பிராரப்தம் என்பது இப்பிறவிக்கு முன்னர் ஏற்பட்ட சிலபல பிறவிகளிலே (Recent past birth) நாம் செய்த கர்ம வினைகளின் தொகுப்பு. இது செயல் பாட்டுடன் உள்ள ஒன்று. இது அடிப்பாகம் சென்று இறுகிச் செயலற்றுப் போகாமல் இப்பிறப்பிலும் செய்யும் கர்மங்களில் கலந்து கொள்ளும் ஆற்றல் படைத்தது.

ஆகாமியம் என்பது நாம் வைத்துள்ள சேமிப்புக் கணக்குப் போல (S.B) எப்போது வேண்டுமானாலும் முடித்துக் கொள்ளலாம். சஞ்சிதம் என்பது வைப்புநிதிக் கணக்குப் போன்றது (F.D) வைப்புநிதிக் கணக்கை முடித்துப் பணத்தை எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலாம். பிராரப்தம் என்பது நடப்புக் கணக்குப் போல வியாபார நடப்புக்

கணக்குப் போன்றது (Current account). இதனை அத்தனை எளிதாக முடித்துக் கொள்ள முடியாது. கணக்கு, தணிக்கை அறிக்கை, கடன் கட்டி முடித்தல், காரண்டி முடிப்பு எனப்பல சடங்குகள் தொடரும். ஏறக்குறைய நம் வியாபாரம் முடியும் காலத்தில்தான் நடப்புக் கணக்கை முடிக்க முடியும். இல்லையெனில் நம்முடைய நடப்புக் கணக்கு நம்முடைய வியாபாரத்தை முடித்துவிடும்.

இதைப் போல நம் வாழ்வில் கேள்வி ஞானம், வைராக்யம், பக்குவப் படுதலில் ஆர்வம் (இறையுணர்வைப் பெறுவதில் ஆர்வம் - (முமூமூட்சுத்தும்) குருவின் அருளால் பெற்ற பரம்பொருளின் உணர்வு. இதனைப்பெற்று எந்த விருப்பு வெறுப்பு கவலை, சஞ்சலம், மகிழ்ச்சி துக்கம் ஏதும் இன்றி, கர்மங்கள் ஏதும் இன்றிப் பக்குவப்பட்டு, சும்மா இருக்கும் ஜீவன் முக்தனையும் ஆகாமியமும், சஞ்சிதம் விட்டு விலகிவிடும். ஆனால் பிராரப்தம், அவர் விதேக முக்தி என்கின்ற உயிர் துறப்பிற்குப் பின்னரே அகலும்.

ஆனால் பரிபூரணம் உணர்ந்த ஞானியின் நயன தீட்சண்யத்தால் எல்லாப் பாவங்களும், பிராரப்தம் உட்பட அத்தனை வினைகளும் அகன்று விடும் என்கிறது வேதாந்த சாத்திரம் ஆகிய சசிவன்ன போதம். இந்த நூல் எவ்வளவு கொடியவர்களாக, கொடூரங்களைச் செய்தவராக இருந்தாலும் ஞானிகள் ஆன குருவின் அருள் கிடைத்தால் அவர்க்கும் நற்கதி கிடைக்கும் என்று உறுதிப்படுத்துகின்ற ஒரு - வரலாறு.

*ஆசிர்வாதங்கள்!*
*ஸ்ரீ சற்குருநாதன் துணை*



# பட்டினத்தார் பைந்தமிழ் - 13

தமிழாகரர் தெ. முருகசாமி

(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் எனத் திருமூலர் (2104) கூறியவாறு பட்டினத்தார் பலவாறாகப் பலப்பல தெய்வங்களைப் பரவாமல் சிவனை மட்டுமே வணங்கும் தொடர்ச்சியில் திருவிடை மருதூரில் வீற்றிருக்கும் மகாலிங்கத்தை ஏகநாயகனைப் போற்றினார்.

இங்ஙனம் அவர் போற்றுதற்கான காரணத்தைக் கூறுங்கால் ஆதித்தனிப் பொருள் ஏக நாயக என்றார். கூறப்பட்ட ஆதி என்ற சொல்லும் தனிப் பொருள் என்ற சொல்லும் ஒரு தெய்வ வழிபாட்டைக் குறிப்பனவாகும்.

தானே அனைத்திற்கும் காரணமாய் முழு முதலாய் உள்ளதே ஆதி. இந்த இலக்கணத்தால் தனக்கு மேலே ஒரு முதல் இல்லாததான முதலாய் உள்ளதே தனிப் பொருள், இவற்றால் திருவிடை மருதூரின் ஈசன் ஏகநாயகன் எனப்பட்டான்.

இந்தப் பெருஞ்சுட்டான கருத்துச் செறிவுடன் நம்மாழ்வார், உயர்வற உயர்நலம் உடையவன் எவன் அவன் - எனத் திருமாலைப் போற்றினார்.

எதெல்லாம் உயர்வு எனக் கருருதுகின்றோமோ அதெல்லாம் உயர்வு அல்லாததாக உயர்ந்த ஒன்று எதுவோ அதுவே உயர் நலம் உடைய பொருள்.

ஆக இறை நலம் பற்றிய பட்டினத்தார் பதிவும் திருவாய் மொழியில் நம்மாழ்வார் பதிவும் ஒன்றாகவே உள்ளதால் பொதுவாக இறைவன் என்பவன் வரம்பில் ஆற்றல் உடையவனாக உள்ள ஏகன் எனத் தெரிகிறது. அதனால் தான்,

**ஆரணந் தொடராப் பூரண! புராண!**
**நாரணன் அறியாக் காரணக் கடவுள்!**

என்றார் பட்டினத்தார். இருப்பினும் சிறப்புக் கருத்தாக உணர்கையில் சிவனை ஏகன் எனச்சுட்டியதற்கு நாராயணனைப் பிரணமாக கூறியது சிந்தனைக் குரியதாக உள்ளது.

இதில் பல்வேறு கிளை கிளையாப் பிரிந்து விளக்கும் வேதங்களாலும் விளக்க முடியாதது எதுவோ அதுவே பழைமையான குறை விலாத நிறை பொருளே சிவன், என்பதால் அவன் ஏகன் எனக்கூறத் தகுதியுடையவன் என்பதைப் பட்டினத்தார் கூறினார்.

மேலும் எல்லாம் அறிந்த நாராயணனும் அறிய முடியாததாய் உள்ளதாக உள்ளதும் எதுவோ அதுவே சிவனாம் ஏகம் என்ற கருத்து சைவசித்தாந்தச் செம்பொருள் பதிவாகப் பட்டினத்தாரால் கூறப்பட்டதாக உள்ளது தான் சிவனை ஏகன் எனப் பிரித்துக் காட்டத் துணையாய் உள்ளது எனலாம்.

சிவஞான போத முதல் நூற்பாவில் மெய் கண்டார் அந்தம் ஆதி என இறைவனைக் குறித்தார். இத் தொடருக்கான விரிவுரையை மாதவச் சிவஞான முனிவர் சிவஞான போதப் பேருரை (மாபாடியம்)யில்

**இல்லதற்குத் தோற்றம் இன்மையின்**
**உள்ளதற்குச் செய்வோன் இன்றிச் செய்வினை**
**இன்மையின் ஒடுங்கின சங்காரத்தின் அல்லது**
**உற்பத்தி இல்லை என்பதால் உலகைத் தோற்**
**றுவித்து முற்றழிப்பு (மகா சங்காரம்) செய்**
*இன்ற வல்லமை உடையவரே ஏகர். அவர் ஆணையே பிற –*
எனக் கூறுவதால் எல்லாம் அறிந்த நாரணனும் அறியாதவராக மருதீசர் உள்ளார் எனப் பட்டினத்தார் கூறிய ஒரு தெய்வ வழிபாட்டின் உன்னதம் தெரிகிறது.

நாரணனைப் பட்டினத்தார் சுட்டியதிலும் மேலெழுந்தவாரியான ஒரு கருத்தும் சிவனை ஏகன் என அறிய உதவுகிறது.

பத்து அவதாரத்திற்கு உட்பட்டவர் திருமால், ஆனால் சிவனோ பிறவா பெரியோன். இந்த வேறுபாட்டுணர்வால் பட்டினத்தார் நகரத்தார் மரபினர் என்பதும் நகரத்தார் மரபைப் பனுவலில் (நூலில்) பதிவு செய்யும். முன்னோடிக் கவிஞர் என்பதும் உறுதியாகிறது.

ஒட்டுமொத்த தமிழ்ச் சமூகக் குடிமக்கள் காப்பியமாகச் சிலப்பதிகாரம் படைக்கப்பட்டாலும் அதன் இன்றியமையாத கதை மாந்தராம் கண்ணகி கோவலர்கள் மன்னர் பின்னோராம் நகரத்தார்

மரபினராய் நூலுள் அடையாளம் காட்டப்படுவதோடு நகரத்தாரின் இறைக் கொள்கையாய்ப் பதிவு செய்யும் போது இளங்கோவடிகள் சிவபெருமானை,

**பிறவா யாக்கைப் பெரியோன் -**

என்ற குறிப்பைப் பட்டினத்தாரின் ஏக என்ற தோடு பொருத்திப் பார்க்க உதவுகிறது. இக்கருத்தை நகரத்தார் மரபின்வரகவி வள்ளல் பாடுவார் முத்தப்பரின் கட்டளை வாசகத்தின் படிப் பழையதைப் புதுப்பித்துக் கொள்ளலாம் என நம்பலாம்.

நகரத்தாரின் மரபை ஆவணப்படுத்தும் வகையில் முத்தப்பர் கூறும் பலவற்றுள் தலையாயது சிவமதத்தில் இருத்தல் என்பதாகும். இந்த அடிப்படை உறுதிப்பாட்டில் பிறதெய்வம் போற்றினாலும்.

**யாதொரு தெய்வம் கொண்டீர் ஆங்கத் தெய்வமாக**
**மாதொரு யாகரே வருவர்**

என்ற சிவஞான சித்தரின் தொடர்ப் பொருளே பிரமாணம் (சாட்சி) என்பதால் சிவப்பரம் பொருளே ஏகன் என்பதை இளங்கோவடிகள் கூறியதிலிருந்து அறுபடாமல் தொடர்கின்றதிற்குப் பட்டினத்தாரின் ஏக என்பதும் ஒன்று எனலா மன்றோ!

இப்படியாகச்சிவன் ஏகனாய் இருப்பதால் அவனிடம் விண்ணப்பம் ஒன்றைப் பட்டினத்தார் கூறுகிறார். யான்இனிப் பிறத்தல் ஆற்றேன் என்பதே அவர் விண்ணப்பம், இதில் பிறவிவேண்டேன் என வேண்டாமல் பிறத்தலை ஆற்றேன் என்றது சிந்தனைக்குரியதாகும்.

ஆன்மா வினைப் பயனால் பிறக்கிறது. அதன் பிறப்பு துன்பகரமானது தாய் வயிற்றில் கருவுற்றுப் பிறக்கும் போது தாயும் ஆன்மாவும் படும் துன்பத்திற்கு அளவே இல்லை.

பிறவித் துன்பத்தை ஆன்மா அடைவதோடு பிறப்பிக்கும் தாயும் துன்பப்படுகிறாள்.

இங்ஙனம் துன்பப்பட்டுப் பிறந்த ஆன்மா உலகில் ஐம்புலங்களால் அலைக் கழிக்கப்பட்டுத் துன்பத்தை அனுபவிக்கிறது.

இத்துன்பங்களிலிருந்து விடுதலைதர வரும் இறப்பானது சுகமாக இல்லாமல் அதுவும் உடம்பார் அழியின் உயிரார் அழிவர் என்றபடி முதிர்ந்து நோயுற்ற நிலையில் உடலோடே உழன்றபடி ஆன்மாவை அலைக்கழிப்பதால் இறப்பும் துன்பமாகவே உள்ளது.

இந்த உண்மைகளை யெல்லாம் ஆன்மா அறிதல்போல ஆண்டவனும் அறிந்தவனாகவே உள்ளதால்தான் பட்டினத்தார் பிறப்பிறப்பினாலான துன்பத்தைச் சுட்டி அவற்றைப் போக்கிக் கொள்ளச் சிவபரம் பொருளை உறுதியாகப் பற்றிக் கொள்வதல்லால் பிறிதில்லை எனப் பரிவுடன் வேண்டுதலை விண்ணப்பித்தார்.

**ஏக நாயக! யோக நாயக!**
**யான்ஒன் றுணர்த்துவது உளதே, யான்முன்**
**நனந்தலை உலகத்து அனந்த யோனியில்**
**பிறந்துழிப் பிறவாது கறங்கெனச் சுழன்றுழிஇத்**
**தோற்றும் பொழுதின் ஈற்றுத் துன்பத்து**
**ஆய்உறு துயரமும் யானுறு துயரமும்**
**நீயலது அறிகுநர் யாரே! அதனால்**
**யான்இனிப் பிறத்தல் ஆற்றேன்....**

இதில் சுட்டிய நீயலது அறிகுநர் யாரே - என்ற தொடர், தலையாய தொடராகும். தலைமை என்றால் எப்படி இருக்க வேண்டும் என்பதை விளக்கும் தொடராக அது உள்ளது.

உடலில் உள்ள பொறிபுலன்கள் ஐந்தும் ஆன்மாவின் கட்டுப்பாட்டிற்குள் இருக்க வேண்டும். அங்ஙனம் இல்லாமல் உதவிக்கான வேலையாள் எஜமானை வழிநடத்துதல் போல் இருந்தால் செயல்பட முடியாது. ஆதலால் ஐம்புல அடக்கம் என்பது ஆன்மாக்களுக்குரியவனாகிய தலைவனால் ஆகக் கூடிய தென்பதால் பட்டினத்தார் விண்ணப்பிக்கையில் நீயலது அறிகுநர் யாரே? என்றார். மேலும் கூறுகையில்,

**ஐம்புலன் ஏவல் ஆணைவழி நின்று**
**தான்அலது ஒன்றைத் தானென நினையும்**
**இது எனது உள்ளம் ஆதலின் இதுகொடு**
**நின்னை நினைப்பது எங்ஙனம்?**

என்கிறார்.

ஐம்புல வழியால் நான் அலைக் கழிக்கப்படுதலால் ஏகநாயக! உன்னை நினைக்க முடியாமல் உள்ளேன். உன்னை நினைக்கவிடாமல் ஆட்சி செய்வதால் அலைமோதும் மனத்தால் உன்னை எப்படி நினைக்க முடியும்? ஆதலால் என்னை நீயலது அறிகுவர். யாரே? என்றார் பட்டினத்தார்.

அடுத்தும் இக்கருத்தைத் தொடரும் போது உன்னை நினைத்தே உய்தியடைந்தவர்கள் உண்டு. முற்காலத்தில் கல்லைத் தெப்பமாகக் கொண்டு கடலை நீந்திக் கரை சேர்ந்த அப்பர் உன் நினைப்பாலே அல்லவா! உய்ந்தார். ஆதலால் உன்னை நினைக்க விடாடல் தடுக்கும் எனது ஐம்புல ஆற்றலைக் கட்டுப்படுத்தி மனம் நன்னெறியில் நிற்கவேண்டும்! அவற்றால் பிறவிநீங்கும் என வேண்டுவது புதுமையாக உள்ளது.

**இறைவ! கற்பம்**
**கடத்தல்யான் பெறவும் வேண்டும்! கடத்தற்கு**
**நினைத்தல்யான் பெறவும் வேண்டும்! நினைத்தற்கு**
**நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டும்!**

பிறவி வேண்டாம் எனவேண்டினோர் பலர். அப்பிறவியைத் தருவதனால், உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி அறவா! நீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க வேண்டும் என்பதாகக் காரைக்கால் அம்மையார் கூறியதாகச் சேக்கிழார் கூறினார்.

எடுத்த பொற்பாதம் காணப் பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே - என்றார் அப்பரடிகன்.

இவர்களுக்கு மாறாகக் கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிரகாசர்.

**விரைவிடை இவரும் நினைப்பிற வாமை**
**வேண்டுநர் வேண்டுக!**
**மதுரம் பெருகுறும் தமிழ்ச்சொல் மலர் நினக்கு**
**அணியும் பிறவியே வேண்டுவன்!**

எனத்திருவண்ணாமலையாரிடம், தமிழால் பாடும் மறுபிறப்பைத் தருமாறு கட்டாயப் படுத்துவது போல் பிறவியே வேண்டுவன் எனத் தேற்றேகரத்தால் கூறினார்.

இங்ஙனம் கூறியோர்களின் கருத்துக்களின் சாயலில் பட்டினத்தார் ஒரு வேற்றுமையாக அதாவது வித்தியாசமாக உனை நினைக்கவிடாமல் தடுக்கும் ஐம்புலச் சேட்டைகளை ஒடுக்கினால் உனை நினைக்கும் வல்லமையை என்மனம் பெறும் என்பதால் அந்த உன் அருளால் உனை நினைந்து பிறவித் துன்பத்தை நீக்கிக்கொள்வேன் என மருதீசரை வேண்டுவது புதுமையாக உள்ளது.

எனவே மருதப்பா எனக் கருதிக் கதிபெறவும் மதியாவது (அறிவாவது) மருதன் கழலே சென்று வாழ்த்தி வணங்குவது எனவும் பட்டினத்தார் அடுத்தடுத்துக் கூறுவதற்கிணங்கத் திருவிடை மருதூர்ப் பெருமானைத் தடையின்றி நினைக்க நல்ல மனம் பெறுவோமாக!

*(தொடரும்...)*

## கைவல்ய நவநீதம் - தத்துவ விளக்கப் படலம்
## (கவி எண்.39, 40ல் அபவாதம் காண், அபவாத உபயமாவிற்காண் ஆராய்ச்சிஉரை - பா. வெங்கடராமன்)

அதுதான் எப்படி என்றக்கால் அநாதியாம் சீவர் எல்லாம் பொதுவான சுழுத்திபோலப் பொருந்தும் அவ்வியத்தம் தன்னில் இது காலதத்துவப் பேர் ஈசன் உட்பார்வையாலே முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே.

இதில், அநாதியாம் சீவர் எல்லாம் என்று சிவர்களுக்கு அநாதி என்ற அடைமொழி கொடுக்கிறார் தாண்டவராய சுவாமிகள்.

அநாதி என்பதை அ (இல்லை) + ஆதி (உற்பத்தி) அநாதி (உற்பத்தியின்றி) என்று பிரிக்கலாம். அதாவது சீவர்கள் உற்பத்தி இல்லாதவர்கள் - பிறப்பு இல்லாதவர்கள் என்று பொருளாகிறது.

அத்வைதக் கொள்கையின்படி, பிரமம் ஒன்றே அநாதி - பிறப்பற்றது. அதற்குத் தோற்றம், ஒடுக்கம் அல்லது பிறப்பு இறப்பு இல்லை. மற்ற சீவராசிகளனைத்தும் அதாவது 84 லட்சம் யோனி பேதங்களாக உள்ள சீவராசிகளனைத்தும் தோன்றி ஒடுங்கக் கூடியவை. (அ) பிறப்பு இறப்புக்குட்பட்டவை.

இந்நிலையில், அநாதியாம் சீவரெல்லாம் என்று கூறும் போது அத்வைதக் கொள்கைக்கு முரணாக உள்ளது. ஏனெனில் அத்வைதம் என்று சொல்லும் போது, இரண்டில்லை, இருப்பது ஒன்றுதான். அந்த ஒன்றுமரபிம்தான். அது அநாதி என்று கூறப்படுகிறது. ஏனெனில், அதற்கு இணையாக வேறு ஒரு பொருள் இல்லை, அதனால் தான், சஜாதீய, விஜாதிய சுவகத பேத ரகிதமானது பிரமம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே அநாதியாம் சீவரெல்லாம் என்று சொல்வது கருத்துப் பேதத்தை உண்டாக்குகிறது. அதோடு மந்த மதி உடைய வருக்குக் குழப்பத்தையும் உண்டு பண்ணுகிறது.

இப்பாடலுக்குப் பொன்னம்பல சுவாமிகள் விளக்கம் அளிக்கும்

போது, ஈசுவரன், சீவன், மாயை(அ) சக்தி, கர்மம், வேதம் இவைகள் எல்லாம் கற்பிதஅநாதி என்கிறார். ஏனெனில் மேற்கூறியவை இவ்வைந்தும் ஏதோ ஒரு காலத்தில் தோன்றியவைகள் தான், ஆனால் அது எப்போது என்று தான் அறுதியிட்டுக் கூறமுடியாது. அதனால் அவைகள் கற்பித அநாதி என்று கூறுகிறார்.

எனினும், தாண்டவராய சுவாமிகளே, இந்தக் கருத்துப் பேதத்தைப் போக்கும் விதமாக, சில பாடல்களில் சீவர்கள் அழிவுக் குட்பட்டவர்கள் என்று குறிப்பிடுகிறார்.

அதனை அறிவதற்குமுன், இது தொடர்பாகப் கம்பனில் ஒரு விளக்கத்தைப் பார்போம்.

இராமனுக்குப் பட்டாபிஷேகம் இல்லை. காடு செல்ல வேண்டும் என்றதும், இராமன் ஏதும் சொல்லாமல் காட்டிற்குச் செல்லத் தயாராக உள்ளான். அதை அறிந்த இலக்குவன் கோபாவேச மாகப் பேசுகிறான். அவனைச் சமதானப்படுத்தும் விதமாக இராமன்,

நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை அற்றே
பதியின் பிழையன்று நம்மைப் பயந்து புரந்தாள்
மதியின் பிழையன்று, மகன் பிழையன்று, மைந்த
விதியின் பிழை நீ இதற்கு என்னை வெகுண்டது என்றான்

என்று கூறி விதியின் மீது தான் குற்றம் என்று கூறுகிறான். அதற்கு இலக்குவன்,

உதிக்கும் உலையுள் உறுதீஎன ஊதை பொங்க கொதிக்கும் மனம் எங்ஙனம் ஆற்று வென்? கோள் இழைத்தாள் மதிக்கும் மதி ஆய் முதல் வானோர்க்கும் வலி இது ஆம் விதிக்கும் விதி ஆகும் என் வில் தொழில் காண்டி என்றான் என்று கூறுகிறான்.

அதாவது விதியை வில்லின் வலிமையால் வென்றுவிடலாம் என்றும் விதியைக் காட்டிலும் வில்லின் வலிமை - ஆற்றல் அதிகம் என்பது போலவும் கம்பன் இங்கே கூறுகிறார். உண்மையில் விதியை வெல்ல முடியுமா? என்றால் அது முடியாது என்பதுதான் பதிலாக அமையும்.

வள்ளுவர் கூட,

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்றுபவர்;

என்று கூறினாலும்,

ஊழ் என்ற அதிகாரத்தில்

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந்துறும்

என்று சொல்லும் போது விதியானது வலிமையானது என்றே சொல்கிறார்.

சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட மூன்று அறங்களிலே, ஒன்று ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்பதாகும் ஆக, விதியானது வலியது என்ற நிலையில், கம்பன் விதியை வில்லால் வெல்ல முடியும் என்று கூறும்போது கருத்துப்பிழை உள்ளது போலத் தோன்றினாலும், பின்வரும் சில பாடல்கள் வாயிலாக அந்தப் பிழையை நீக்கும் விதமாகப் பாடல் இயற்றி பரிகாரம் காண்கிறார்.

ஆரண்ய காண்டத்தில், இராமன் பொன்மானைப் பிடிப்பதற்காகப் அதன் பின் சென்றுவிடுகின்றான். சற்று சேரத்தில், இலக்குவனா ஆபத்து! ஆபத்து!! என்று குரல் கேட்கிறது. இதை கேட்ட சீதை இலக்குவணனிடம் உன் அண்ணனுக்கு ஆபத்து போய்க் காப்பாற்று எனக் சொல்கிறாள். இலக்குவன் இராமனின் வில்லின் பெருமையை எல்லாம் கூறுகிறான், அதைக் கேட்ட சீதை

ஒருபகல் பழகினார் உயிரை ஈவரால்
பெருமகன் உலைவுறு பெற்றிகேட்டும் நீ
வெருவலை நின்றனை வேறுஎன்? யான்.
எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென் ஈண்டு எனா?

என்றும்,

நின்ற நின்நிலை இது நெறியிற்று அன்று என்ற எனவும் கூறுகிறாள். அதைக்கேட்ட இலக்குவன் துஞ்சுவதென்னை? நீர் சொன்ன சொல்னலயான் அஞ்சுவென் மறுக்கிலென், அவலம் திர்ந்து இனி இஞ்சுஇரும் அடியனேன் ஏகுகின்ற வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ என்கிறாள். யார், விதிக்கு விதியாகும் என்வில் தொழில் காங்டி என்று கூறினானோ அவன் வாயாலேயே கொடிய விதியினை வெல்ல முடியுமா? என்று இலக்குவன் சொல்வதாகக் கம்பன் தான் முன்பு விதியை வெல்லலாம் என்று கூறிய தன் தவறுக்குப் பரிகாரத்தை இந்த இடத்தில் கூறுகிறார். இந்த அளவில் நில்லாமல் விதி வலியது என்னும் கருத்தை உறுதிப் படுத்தும் விதமாக கும்பகர்ணன் வாயால் சொல்லவும் செய்கிறார்.

இராமனுக்கும் இராவணனுக்கும் போர் நிகழ்கிறது. கும்ப கர்ணனைப் போரில் ஈடுபடுத்த மந்தர ஆலோசனையில் முடிவுசெய்து கும்பகர்ணனை எழுப்புகிறார்கள். உறக்கத்திலிருந்து எழுந்து கும்பகர்ணன்

**ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்**
**கானகிதுயர் இனம் தவிர்ந்தது இல்லையோ?**
**வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ்**
**போனதோ? புகுந்ததோ! பொன்றும் காலமே!**

என்றும்

**கிட்டிதோ செருகிளர் பொன் சீதையைச்**
**சுட்டியதோ! முனம் சொன்ன சொற்களால்**
**திட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை**
**விட்டிலையோ! இது விதியின் வண்ணமே**

என்றும்

**வென்று இவண் வருவென் என்று உரைக்கிலேன் விதி**
**நின்றது பிடர் படித்து உந்த நின்றது**
**பொன்றுவென் பொன்றினால் பொலன்கொள் தோளியை**
**நன்றுஎன நாயக விடுதி நன்று அரோ**

என்று கூறுவதன் மூலம் முன்கவியில் ஏற்பட்ட கருத்துப் பிழையை நீக்கியதோடு அல்லாமல் விதியின் வண்ணமே என்று அதனை உறுதியும் செய்கிறார்.

அதே போல, திருமூலரும்

**பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்**
**பதியினைப் போல் பசுபாசம் அநாதி**
**பதியினைச் சென்று அணுக பசுபாசம்**
**பதியணுகில் பசுபாசம் நிலாவே**

என்று சொல்லும் போது, பதியாக இறைவனைப் போலவும் பசுவாகிய உயிரும் பாசமாகிய மாயையும் அநாதி என்கிறார். ஆனால் அடுத்த இரண்டு வரிகளில் பதியாகிய இறைவன் ஆட்கொண்டால். பசுவாகிய உயிரும் பாசமாகிய மாயையும் நிற்காது - அதாவது சீவத் தன்மையும் மாயையும் நீங்கி - அழிந்து இறைவனுடன் ஒன்றிவிடும் என்று கூறுகிறார்.

அவ்வாறே தாண்டவராய சுவாமிகளும் முன்னே கூறிய அநாதியாம் சீவரெல்லாம் என்ற வாக்கியத்தில் ஏற்பட்ட தோஷத்தை நிவர்த்திக்கும் விதமாக, பின்வரும் பாடலில்

**ஈசனுக்கு இது சுழுத்தி இதுவே காரண சரீரங்**
**கோசம் ஆநந்தமாகும் குணம் இராசதம் அவித்தை**

தேசறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவகோடி நாசமாம் உயிர்க்கப் போது நாமும் பிராஞ்ஞனாமே என்று கூறுகிறார். இப்பாடலில் சீவர்களின் சிருஷ்டியைக் கூறும் போதே - அதாவது மூலப் பிரகிருதியின் ரஜோகுண அவித்தையில் தோன்றியவர்கள் சீவர்கள் என்று கூறும்போதே நாசமாம் உயிர்க்கு என்று உயிர்களின் அழிவையும் - சிறப்பையும்கூறுகிறார். பொதுவாகவே, ஒருவர் பிறக்கும் போது அவருடைய சிறப்பும் எழுதப்பட்டுவிட்டது என்றும் சொல்வார்கள்

பிறந்ததிலிருந்து ஒவ்வொரு நாள் முடிவும் இறப்பை நோக்கிய
பயணம் தான். அதைத் தான் வள்ளுவரும்
நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்

என்கிறார்.

ஆக, பிறக்கும் போதே இறப்பும் எழுதப்பட்டுள்ளதால் சீவர்கள் பிறப்பு இறப்பு என்னும் சுழற்சிக்கு உட்பட்டவர்கள். அவர்கள் அநாதி அல்ல.

அதுமட்டுமல்ல, பின்வரும் பாடலில் அதனை வலியுறுத்திக் கூறுகிறார்.

இந்த நீ துவம்பதத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்
பந்த மில் பிரமமே தற்பதந்தனில் இலட்சியார்த்தம்
அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சியார்த்தம்
சந்ததம் பேதமாவார் தமக்கு அயிக்கியம் கூடாதே

இப்பாடல் தத்துவ மகாவாக்கியத்தின் இலட்சியார்த்தம், வாச்சியார்த்தம் இவற்றை விளக்குவதாகும். வாச்சியார்த்தத்தை விளக்கும் போது, சீவன் ஈசன் அவர்களே வாச்சியார்த்தம் என்னுமிடத்தில் அந்தமாம் என்னும் அடைமொழி தந்து குறிப்பிடுவதால் அதாவது அழிவுக்குட்பட்டவர்கள் இறப்பிற்குட்பட்டவர்கள் என்று சொல்லும் சீவர்கள் அநாதி அல்ல என்கிறாகிறது.

அதுமட்டுமல்ல, ஈசனும் அநாதி அல்ல; அவரும் அழிவுக்குட்பட்டவர்

என்பதாலேயே அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே என்று குறிப்பிடுகிறது. பிரமம் ஒன்றே அநாதி மற்ற சீவராசிகள் அனைத்தும் பிறப்பு இறப்புக்குட்பட்டவர்கள். ஆகவே ஏற்கனவே குறிப்பிட்டபடி ஈசன், சீவன், மாலை (அ) சக்தி, கர்மம், வேதம் இவைகளெல்லாம் அநாதி அல்ல. ஏனெனில் இவைகள் எல்லாம் ஒருகாலத்தில் தோன்றியவை தான் ஆனால் அந்தக் காலம் இது தான் என்பது நிர்ணயித்துக் (அ) கூறமுடியாததனால் அவைகள் கற்பித அநாதி என்று சொல்லப்படுகிறது.

அது மட்டுமல்லாது, கைவல்ய நவநீதத்தின் இருபத்தியோராவது பாடலிலே

அப்பிரமத்திற் தோன்றும் ஐம்பூத விகாரமெல்லாம்
செப்புகற்பனை யினாலே செனித்தவென்று அறிந்து கொள்ளே

என்று குறிப்பிட்டுள்ளதால், அத்வைதக் கொள்கைக்கு முரண்பாடு இல்

லாமல், கற்பித அநாதி என்ற பொருளிலேயே அநாதியாம் சீவரெல்லாம்

என்று தாண்டவராய சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார் என்பது இவ் விசாரணை வாயிலாக விளங்குகிறது.

## உய்யும் வழி நல்காய்

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

அரிது அரிது மானுடராய்ப் பிறத்தல் அரிது. அவ்வாறு அரிதாகப் பெறப்பட்ட மானுடப் பிறவிக்குத் தமது வாழ்நாளில் நலமுடன் இணைந்த நல்வாழ்வு நம் வாழ்வில் வேண்டும் என்கிற எண்ணம் ஏற்படுகின்றன. அவற்றை அடையும் வழிகளும் தேடப்படுகின்றது. அதற்குப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. உலக வாழ்வில் நடந்ததும், நடப்பதும், இனிமேல் நடக்கப் போவதும் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டவைகள் அல்ல. எனவே நடப்பவைகளை ஏற்கின்ற பக்குவம் மனிதர்களுக்குத் தேவையாகின்றது. அதற்கேற்ற எண்ணங்களையும் மனதையும் அமைத்துக்கொள்வது அவசியமாகின்றது. மனம் போல வாழ்வு எனப்

பெரியோர்கள் சொல்கிறார்கள். எனவே, நல்லமனம் இருப்பின் நல்லவாழ்வு நிச்சயம் என எடுத்துக்கொள்ளலாம்.

திருவாசகம் மனிதனது மனத்தைப் பண்படுத்தும் பக்திநூலாகத் திகழ்கின்றது. யானே பொய் என்நெஞ்சம் பொய் என் அன்பும் பொய்; ஆனால் வினையேன் அழுதால் உனைப் பெறலாமே என இறையருளைப் பெறும் வழியினை விளக்குகின்றது திருவாசகம். இறையருளைப்பெற வழிகாட்டும் திருவாசகம், மனிதனது நல்வாழ்விற்கும் உய்யும் வழிக்கும் திருவாசகம் வழிகாட்டாமலா நிற்கும். உறுதியாகத் துணை நின்று வழிகாட்டும்.

திருவாசகத்தில் திருச்சதகம் எனும் பகுதியில் சுட்டறுத்தல் என்கிற பிரிவில் கீழ்க்காணும் பாடல் இடம் பெற்றுள்ளது. இப்பாடல் நல்ல நோக்கத்தை நோக்கியே நமது சிந்தனை இருக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

சிந்தனை நின்தனக்கு ஆக்கி நாயினேன்தன்
கண்இணை நின்திருப்பாதப் போதுக்குஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கேஆக்கி வாக்குஉன்
மணிவார்த்னதக்கு ஆக்கி ஐம்புலன்கள் ஆர

சிந்தனை, பார்வை, வணக்கம், பேச்சு, ஐம்புலன்கள் அனைத்தும் உன்பால் ஈர்த்து என்னை ஆட்கொண்டாய் என மாணிக்கவாசகர் சொல்வதாக இப்பாடல் அமைந்துள்ளது. இப்பாடலின் உட்பொருளை உணர்ந்தால் நமது வாழ்வு செம்மையாகும். ஊர் ஏற்கத்தக்க, போற்றத்தக்க நல்ல எண்ணங்களும் நல்ல செயல்களும் நமது வாழ்வை மேம்படுத்தும். உய்யும் வழிவகை நல்கும். நமது சிந்தனை பார்வை, வணக்கம், பேச்சு, ஐம்புலன்கள் நமது நல்ல செயல்களை நோக்கியே இருக்க வேண்டும் என்கிற உயரிய கருத்து இப்பாடலில் உணரப்படுகின்றது. படிக்கின்ற மாணவனது சிந்தனையும், பார்வையும், பேச்சும், புலன்களின் ஈர்ப்பும் படிப்பை நோக்கியே இருக்க வேண்டும். கவனம் சிதறிவிடக்கூடாது. கடமை தவறிவிடக்கூடாது. இந்த உயரிய கருத்து இந்த மண்ணில் வாழ்கின்ற அனைத்து மனிதர்களுக்கும் பொருந்தும். கடமையை முன்நிறுத்தி, தன்னைப் பின்நிறுத்தும் உயரிய செயலை

இப்பாடல் கற்றுத்தருகின்றது. இந்த உயரிய செயலைக் கடைப்பிடிப்போர் உயர்வான வாழ்வினைப் பெறுவர் என்பது திண்ணம்.

திருச்சதகத்தில் கைம்மாறு கொடுத்தல் பிரிவில் வரும் கீழ்க்காணும் முதற்பாடல் நமது மனக் கதவினைத் திறந்து நம்மை நாம் அறிய உதவுகின்றது.

**இருகை யானையை ஒத்திருந்து என்உளக்**
**கருவை யான்கண்டிலேன் கண்டது எவ்வமே**
**வருக என்று பணித்தனை வான்உளோர்க்கு**
**ஒருவனே கிற்றிலேன் கிற்பன் உண்ணவே.**

நம்மைப் பற்றி நாமே உணராதிருப்பது நல்லதல்ல. நமது உள்ளத்திலே பொதிந்து கிடக்கின்ற நல்ல எண்ணங்களை நாம் அறிந்து வெளிகொணராது இருந்தால், நாம் இருகை கொண்ட யானையாக இருப்போம் நமது மனதிலிருந்து நல்ல நல்ல செயல்களைச் செய்கிற போது, மனிதனாகின்றோம். என்னைப் பற்றி நான் அறியவில்லை. இறைவன் எவ்வாறு அறிந்தார் என மாணிக்கவாசகர் கேள்வி எழுப்புகின்றார். ஒவ்வொருவரும் தம்மை அறிந்து கொள்ளவேண்டும். தனது மனக்கதவைத் திறந்து பார்க்க வேண்டும்; தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை அறியாமல் தானே கெடுகிறான், தன்னை அறியும் அறிவை அறிந்தபின். தன்னைத்தானே அர்சிக்கத் தான் இருந்தானே எனத் திருமூலர் தெரிவிக்கின்றார். உன்னை அறிந்தால் நீ உன்னை அறிந்தால் உலகத்தில் போராடலாம் உயர்ந்தாலும் தாழ்ந்தாலும் தலைவணங்காமல் நீ வாழலாம் என்கிற வரிகள் மனதில் ஓடுகின்றன.

ஒரு செயலைச் செய்கின்ற போது நமது கவனம் அனைத்தும் அச்செயல்மீது இருக்கவேண்டும். கவனத்தைச் சிதைக்கின்ற அனைத்தையும் மறத்தல் வேண்டும். இதனைக் கீழ்க்காணும் திருவாசகம் தெளிவுபடுத்துகின்றது.

**இணையார் திருவடி எனத்தலைமேல் வைத்தலுமே**
**துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்**
**கயல்மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக்கலந்து ஆண்டலுமே**
**அயல்மாண்டு அருவினைச் சுற்றமும்மாண்டு அவனியின்மேல்**
**மயல்மாண்டு மற்றுள்ள வாசகமாண்டு என்னுடைய**

செயல்மாண்டவா பாடித் தெய்ளேணம் கொட்டாமோ.

இறைவனது திருவடிகள் என்தலைமீது வைக்கப்பட்டதும், துணையாக நின்ற அத்துணை உறவுகளையும் துறந்தேன். பாசவேர் அறுக்கும் பழம்பொருள் தன்னைப் பற்றுமாறு அடியேற்கு அருளி என்கிறார் மாணிக்கவாசகர். பாசவேர் அறுப்பின் இறையருள் உண்டு. தன்னலம் மறப்பின் உயர்வாழ்வு உண்டு என்பதைத் திருவாசகம் தெரிவிக்கின்றது. இறையருள் கிட்டியதும், அருகே உள்ள பாசப் பற்றுகள், சுற்றம், உலகத்தின் மீதுள்ள ஆசை அத்தனையும் மறந்து என்னுடைய அன்றாடச் செயல்களும் மறந்தன என மாணிக்கவாசகர் நம்மை வழிநடத்துகின்றார். இதனையே வலியுறுத்தும் திருஞானசம்பந்தர், சுற்றமொடு பற்றவை துய்க்கற அறுத்துக் குற்றமில் குணங்களோடு கூடும் அடியார்கள் எனத் தெரிவிக்கின்றார்.

ஊன்பழித்து உள்ளம்புகுந்து என்உணர்வு அதுவாய, என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். நமது நல்ல நோக்கம், உடம்பிலே புகுந்து. உள்ளத்திலே புகுந்து உணர்வாக இருக்க வேண்டும். சுதந்திர வேட்கை என்பது பாரதியின் உடல் புகுந்து உள்ளம் புகுந்து, உணர்வாகவே இருந்தது. நாம் செய்கின்ற பணி நமது உணர்வாக இருக்க வேண்டும். அப்போது தான் அந்த உணர்வை மற்றவர்க்கு ஊட்ட முடியும். மகாத்மா காந்தி, தேசத்தின் சுதந்திரத்தை உணர்வாகக் கொண்டிருந்தார். சுதந்திர உணர்வை மக்களுக்கு ஊட்டினார். மாணவர்கள் படிப்பை உணர்வாகக் கொண்டால், படிப்பினைகள் பெறலாம். பொதுநலம் ஒவ்வொருவரின் உணர்வாக இருப்பின் தேசம் உயர்வடையும். நாம் எந்தப் பணி செய்தாலும் அப்பணி நமது உணர்வாக வெளிப்படும்போது பணியும் சிறக்கும். நாமும் சிறப்புப் பெறுவோம். வாழ்வும் உயர்வடையும்; இறைவன் என் உடம்பில் புகுந்து உள்ளம் புகுந்து எனது உணர்வாகிய பின் இறையுணர்வாகவே இருக்கிறேன் என்கிறார் மாணிக்கவாசகர். இவ்வரிகளை நாம் அன்றாட வாழ்வில் கடைப்பிடித்து வந்தால் வாழ்வில் உயர்வது திண்ணம் என்பது புலப்படும். கலை என்பது கலைஞனிடத்திலே ஊன் பழித்து, உள்ளம் புகுந்து உணர்வதுஆகி இருக்க வேண்டும். அப்போது தான் கலைஞன் வெற்றிபெற முடியும். ஊனாய், உயிராய், உணர்வாய் என்னுள் கலந்து என்கிறார் மாணிக்கவாசகர். மொழி, கலை, பண்பாடு

எந்தச் சமுகத்தில் ஊனாய், உயிராய் இருக்கிறதோ, அச்சமூகம் வெல்கின்றது. உய்கின்றது. தனிமனிதன் உய்யும் வழி அதுவே அவ்வழியே சென்று உய்வோமாக.

தாமே தமக்குச் சுற்றமும் தாமே விதிவகையும் யாமார் எமதார் பாசமார் என யாத்திரைப்பத்திலே மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். எனக்கு உறவினன் நானே, பகைவன் நானே, பகை உருவாக்குபவன் நானே, உறவுகளை உருவாக்குபவன் நானே, எனக்கு நிகழ்கின்ற அனைத்திற்கும் விதிவகை. வழிவகை செய்பவனும் நானே என ஒவ்வொருவரும் தன்னை உணர வேண்டும். இந்த உயர்வு நம்மை நெறிப்படுத்தும். நல்வாழ்வு தரும். நம்வினைக்குப் பிறர்மீது பழி போடக்கூடாது. இந்த உணர்வு உயர்ந்தால். உலகம் உய்யும். இக்கருத்தினைத் திருமூலர் கீழ்க்கண்ட பாடலில் வலியுறுத்துகின்றார்.

**தானே தனக்குப் பகைவனும் நட்டானும்**
**தானே தனக்கு மறுமையும் இம்மையும்**
**தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானும்**
**தானே தனக்குத் தலைவனும் ஆமே.** *(திருமந்திரம் 2228)*

கடலின்திரை அதுபோல்வரு கலக்கம் என மாணிக்கவாசகர் உயிருண்ணிப்பத்தில் ஆறாவது பாடலில் குறிப்பிடுகின்றார். கடலில் தோன்றும் அலைகள் போல வாழ்வில் கலக்கமும் கவலையும் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். கலக்கமும் கவலையும் நிரந்தரமன்று. கடலில்அலை வரும், போகும். வாழ்வில் கலக்கம் வரும், போகும் என்பதை உணர வேண்டும். இதுவும் உயர்வான வாழ்விற்கான வழிவகையாகும்.

உயிருண்ணிப்பத்து ஒன்பதாவது பாடலில் நம்மை நாம் அறிந்து கொண்டு நமக்குரியதைப் பெற முயல வேண்டும் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார்.

எச்சம் அறிவேன் நான்எனக்கு இருக்கின்றதை அறியேன்
அச்சோ எங்கள்அரனே அருமருந்தே எனதமுதே
செச்சை மலர்புரைமேனியன் திருப்பெருந்துறை உறைவான்
நிச்சம்என நெஞ்சில்மன்னி யான்ஆகி நின்றானே.

எனக்குத் தேவையான அனைத்தும் அறிவேன். ஆகையால்

எனக்குள் இருப்பதை அறியேன். அதற்குத் தகுதியானவனா என்பதை அறியேன். இறைவா, உன்னையே நிச்சயம் என நம்பி நெஞ்சில் வைத்து நினைத்து வாழ்ந்தேன். என்னுள் நீ வந்து நின்றாயே என மாணிக்கவாசகர் உருகி நிற்கிறார். எனக்கு இது தேவை. எனக்கு இது வேண்டும் என நமது தேவைகளை நாம் அடுக்கிக்கொண்டே போகின்றோம். இவையெல்லாம் தற்போது நமக்குத் தேவைதானா, அதற்குரிய தகுதி நம்மிடையே உள்ளதா என்பதனை உணருவதில்லை. உணர்ந்தால் வாழ்வு உயரும். நல்ல செயல்களை நாம் நினைக்க, நினைக்க அச்செயல்கள் நமக்குக் கைகூடும்.

அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பது ஆனால் அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் என்கிறது திருவாசகம். மாணிக்கவாசகர் நெஞ்சில் இறைவனும் இறைவியும் இருக்கிறார்கள். இது எத்தகு பிறவிப்பயன். இதைவிட உயர்வான நிலை ஒருவருக்கு உலகத்தில் இல்லை. இதனை மாணிக்கவாசகர் உயர்வான அருளாக நினைக்கவில்லை. இறைவா, உனது அடியார்கள் நடுவில் என்னை நிறுத்து. இதுவே உயர்வான அருள். இந்த அருளைப் புரியாய் என மாணிக்கவாசகர் வேண்டுகின்றார். இக்கருத்து மானுட வாழ்விற்கு அப்படியே பொருந்தும். படிப்பும் பட்டமும் என்னிடத்தே இருக்கின்றன. இது ஒரு பெரிய மேன்மை இல்லை. படித்தவர்கள், பட்டம் பெற்றவர்களும் நான் படித்தவன் என என்னை ஏற்க வேண்டும். இது தான் எனக்கு மேன்மை. இதற்குக் கடுமையான உழைப்பு தேவை. மற்றவர்கள் நம்மை ஏற்கும் அளவிற்கு மற்றவர்களுக்காக உழைக்க வேண்டும். மற்றவர்கள் உள்ளத்திலே இடம் பெறவேண்டும். இந்த உயரிய கொள்கை நமது வாழ்வை உயர்த்தும். அடியார்கள் தம்மை ஏற்றால் தான் தனக்குப் பெருமை என எவ்வாறு மாணிக்கவாசகர் உறுதியாக இருந்தாரோ அவ்வாறே, பாமரர்கள், தம்மைப் படித்தவன் என ஏற்க வேண்டும் என்பதில் ஒவ்வொரு படித்தவனும் கலைஞனும் உறுதியாக இருக்க வேண்டும். இத்தகு கொள்கையே அவர்களது உயர்விற்கு வழி செய்யும். திருவாசகம் கற்றுத் தருகின்ற பாடமும் இதுவேயாகும்.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

உயிர் போன உடல் முற்றும் எரித்துப் பொடிசாம்பல் ஆகி விட்டது. சாம்பலாய்ப் போய்விட்டது. வேண்டித் தவங்கிடந்து ஈன்றதாய் என்னை மறந்து வெந்து போனாளே சோணகிரி வித்தகா என்று அண்ணாமலையாரை நோக்கித் தன் ஆற்றாமையை நினைத்துப் பாடிய இரங்கற் பாவில் புலப்படுத்துகிறார். அதனை வெளிப்படுத்திய பாடல் கீழே

**வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்**
**வந்தாளோ என்னை மறந்தாளோ - சந்ததமும்**
**உன்னையே நோக்கி உகந்துவரங் கிடந்துஎன்**
**தன்னையே ஈன்றெடுத்த தாய்**

இப்பொழுது இரங்கிய அவருடைய நெஞ்சம் ஏறத்தாழ பக்குவ நிலை அடைந்து விட்டது. எரித்த சாம்பல் நீறாகிப் போனது. நேற்று உயிருள்ள உடலாய் நடமடினாள். இன்று பிடி சாம்பலானாள். இதுதான் வாழ்க்கை என்ற பக்குவ நிலை வந்தமையால் எல்லாம் சிவமயம் என்ற நிலைக்கு வந்து ஆறுதல் அடைகிறார்.

**வீற்றிருந் தாள்அன்னை வீதி தனில் இருந்தாள்**
**நேற்றிருந்தாள் இன்றுவெந்து நீறானாள் - பால்தெளிக்க**
**எல்லீரும் வாருங்கள் ஏதென்(று) இரங்காமல்**
**எல்லாம் சிவமயமே யாம்**

என்று அனைவரையும் அன்னைக்குப் பால் தெளிக்க அழைக்கின்றார். வாருங்கள் என்ற பாடல் மூலம் பதிவு செய்கிறார் பட்டினத்தார். இந்தப் பட்டினத்தார் பாடலிலே,

*மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும்தன் வாயில்மட்டே*
*இனமான சுற்றம் மயானம் மடஅளவாகினும் முன்பு செய்ததவம்*
*தனைஆள என்று பரலோகம் சித்திக்கும் சத்தியமே*

என்ற பாடல் ஒருவர் இறந்த பின்னால் அவனுடன் யார் வருவார்? அவரைப் பற்றித் தொடர்வன அவனுக்குண்டான பாவ புண்ணியங்களே வேறு யாரும் உடன்வரார். இக்கருத்தைத்தான் பாதகாணிக்கை என்ற பாடலில் ஏற்றி உலகமெங்கும் கேட்கச் செய்தவர் கவியரசர்

கண்ணதாசன் அவர்களே. பெருஞ்செல்வராய் விளங்கிய பட்டினத்தார் அத்தனை செல்வத்தையும் சூறைவிட்டு விட்டுத் துறவு பூண்டார். அதனால் ஏற்பட்ட ஞானமுதிர்ச்சி அவர் பாடிய பாடல்களில் பரக்கக் காணலாம். விரித்து எழுதப்புகின் அது பெருநூலாக விரியும். சான்றாகச் சிலவற்றை மட்டும் பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கம். இனி அவர் சில சிவத்தலங்களைப் பற்றிப் பாடிய பாடல்களைப் பார்க்கலாம். கீழ்வரும் பாடல்கள் திருவொற்றியூர் இறைவனை நோக்கிப் பாடியன.

திருவொற்றியூர்த் திருத்தலத்தில் அவர் சமாதியானார். எனக்குப் புத்திப்பேறு என்று வாய்க்கும் என்று இறைவனிடம் வேண்டும் பொழுது இறைவன் அவரிடம் உனக்கு எப்பொழுது கசப்புடைய பேய்க்கரும்பு இனிக்குமோ அன்று நீ முத்தி பெறுவாய் என்று கூறி அருளினார். அவர் திருவொற்றியூர் சென்ற காலை அங்குள்ள பேய்க்கரும்பு இனித்தது. அதனால் தான் ஒற்றியூர்க் கடலருகே நிற்கும் கரும்பு இறைவனை விளித்தார். நீரும் சோறும் தேடி வாழும் வாழ்க்கை என்று நீங்குமோ? என்று உன் சந்நிதிக்கு வந்து சேரும் நாள் எந்நாளோ? என்று முப்புரங்களையும் எரித்த சிவனே! என்று கேட்கின்றார்.

அடுத்த பாடலில் நஞ்சுண்டமையால் கருத்த கழுத்தை உடையவனே! கண்மூன்றுடைய பெருமானே! தொண்டனாகிய எனக்குத் திருவொற்றியூர்க் கரும்பு தித்திக்கும் என்று ஏக்கத்தோடு பாடுகிறார்.

**கண்டம் கரியதாம் கண்மூன்(று) உடையதாம்**
**அண்டத் தைப்போல் அழகிதாம் - தொண்டர்**
**உடல்உருகத் தித்திக்கும் ஓங்குபுகழ் ஒற்றிக்**
**கடலருகே நிற்கும் கரும்பு.**

என்பதே அப்பாடல்.

வாடி வதங்கிச் சீழ் வடியும் ஒன்பது வாயில்களை உடைய புண்ணாகிய இந்த உடலுக்குரிய மருந்து எதுவென்று நான் கண்டு கொண்டேன். அது நஞ்சுண்ட தேவாதி தேவனாகிய இறைவன் அருளாட்சி செய்யும் திருவொற்றியூர்த் தெருவில் நடப்பார்தம் காலடி மண்ணே என்று பாடிய பாடல் இது

**ஓடுவிழுந்து சீப்பாயும் ஒன்பது வாய்ப் புண்ணுக்(கு)**
**இடுமெருந்தை யான்அறிந்து கொண்டேன் - க(டு) அருந்தும்**
**தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்**
**போவார் அடியில் பொடி.**

தன்னை ஆட்கொண்ட திருவொற்றியூரே சிவலோகம் என்று உறுதிபடக் கூறிய பட்டினத்தார் அங்குள்ள குளங்கள் அனைத்தும் புண்ணிய தீர்த்தங்கள். அத்தலத்திலுள்ள மண்ணெல்லாம் புனிதமான திருநீறு; காவணங்களே கணநாதர் என்று மெய்த்தவத்தோர் கூறுவர் என்றும் உறுதிப்படுத்துகிறார். அப்பாடல் இதுவே.

**வாவிஎல்லாம் தீர்த்தம் மணல்எல்லாம் வெண்ணீறு**
**காவணங்கள் எல்லாம் கணநாதர் - பூவுலகில்**
**ஈது சிவலோகம் என்(று) என்றே மெய்த்தவத்தோர்**
**ஓதும் திருவொற்றியூர்.**

அடுத்த பாடல் கொஞ்சம் கடுமையான மக்களை அதாவது ஒன்றும் தெரியாத ஊமைகளாய் இருக்கின்றீர்களே! என்ற வினவாக வெளிப்படுகிறது. ஏன் அவ்வாறு கூறினார் என்பது கீழ்வரும் பாடலால் வெளிப்படுகிறது.

ஆரூர்ப் பெருமான் இந்தத் திருவொற்றியூரில் இருக்க நீங்கள் இங்கு நடைபெறும் திருநாளைக் காணாது ஊர்தோறும் சென்று உழல்கின்றீர். நீங்கள் ஒன்றும் தெரியாத ஊமைகளாய் விளக்கு இருக்கத் தீயைத் தேடுவார் போல் அல்லவா இருக்கின்றீர் என்ற கருத்தமைந்த பாடல் இது.

**ஆரூரர் இங்கிருக்க அவ்வூர்த் திருநாளென(று)**
**ஊரூர்கள் தோறும் உழலுவீர் - நேரே**
**உளக்குறிப்பை நாடாதே ஊமர்காள் நீவிர்**
**விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.**

தொடர்ந்து பட்டினத்தார் பாடுகையில் மனிதர்கள் காமத்தில் உழலுகிறார்கள் என்ற ஆதங்கத்தை வெளிக்காட்டுவதாகக் கேட்கும் விதமாக இருக்கிறது. எருவாய் என்றால் அது. ஆசனவாயைக் குறிக்கும். அந்த எருவாய்க்கு இரண்டு விரற்கடைக்கு மேலே இருக்கும் கருவாய்க்கு (பெண்குறி) ஆசைப்பட்டாயே. தேரோடும் பெருமை பெற்ற

திருவாரூர்த் தேரோட்டம் காணாது நீர் வடியும் (சிறு நீர்) குழியை விரும்பி வாழ்கின்றாயே? என்பதைக் குறித்த பாடல் இது

**எருவாய்க்(கு) இருவிரல்மேல் ஏறுண் டிருக்கும்**
**கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய் - திருவாரூர்த்**
**தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்**
**நீரோடும் தாரைக்கே நீ.**

எண்ணத் தொலையாதபல பிறவிகளை எடுக்கும் உயிர் ஒருபிறவியிலும் ஒரு வீட்டைப் பெறும். ஒரு ஊரில் பிறக்காத உயிர் எடுத்த பிறவிக்கெல்லாம் ஊர்மாறும். பெயர்களும் எத்தனையோ? தாய்தந்தையர் எத்தனையோ பேர்? ஏகம்பனே இவையெல்லாம் உன்னுடைய திருவிளையாட்டே.

**எத்தனை ஊர் எத்தனைவீடு எத்தனைதாய் பெற்றவர்கள்**
**எத்தனைபேர் இட்டழைக்க ஏன்என்றேன் - நித்தம்**
**எனக்குக் களையாற்றாய் ஏகம்பா! கம்பா!**
**உனக்குத் திருவிளையாட் டோ**

பசி வந்திடப் பறந்து போம் என்ற முதுமொழி துறவிக்கும் பொருந்தும் என்பது பட்டினத்தார் வாக்கிலே வெளிப்படுகிறது. அவருக்குப் பசி அதிகமாக வந்த பொழுது அதாவது திருக்காரோணம் சென்ற பொழுது அத்தலத்தில் உள்ள பெருமானை நோக்கிச் சோறளிக்க வேண்டுகிறார். இறைவனும் சோறளிக்கின்றான். பாடலைப்பார்க்கலாம். மிகப்பெரிய யானைக்கும் மிகச்சிறிய எறும்புக்கும் பசி ஏற்படும். இவைகட்கெலாம் உணவளிக்கும் இறைவா! எமக்கும் பசிக்கிறது. சோறு தா என்று வேண்டுகிறார்.

**அத்தி முதல் எறும்(பு) உளஉயிர் அத்தனைக்கும்**
**சித்தம் மகிழ்ந்தளிக்கும் தேசிகா மெத்தப்**
**பசிக்குதையா! பாவியேன் பாழ்வயிற்றைப் பற்றி**
**இசிக்குதையா! காரோணத்தரே**

இதுதான் பாடல் பொய்சொல்வதை விடமாட்டாய். ஊள் உண்பதையும் விடமாட்டாய்; கொடிய கோபத்தையும் விடமாட்டாய்; நமசிவாய என்ற சிவனுடைய அஞ்செழுத்தை ஓதமாட்டாய். இவ்வாறிருக்க ஏமனே! இதனால் என்ன பெருமை உனக்கு உள்ளது. இக்கருத்தினைக் கொண்ட பாடல் இது.

**பொய்யை ஒழியாய் புலாலைவிடாய் காளத்தி**
**ஐயரே எண்ணாய் அறம்செய்வாய் - வெய்ய**
**சினமே ஒழியாய் அஞ்செழுத்(து) அதையும் ஓதாய்**
**மனமே உனக்(கு) என் மாண்பு?**

பிறவி வேண்டாம் இறைவனே! நீதான் காப்பாற்ற வேண்டும் என வேண்டுகிறார் பட்டினத்தார். இக்கருத்தை ஆழ்வாரும் வேண்டுகிறார். நான் எண்ணத் தொலையாப் பிறவி எடுத்தமையால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே என்பது தான் ஆழ்வாரின் வேண்டுகோள். பட்டினத்தார் பாடலை இனிப்பார்க்கலாம். அப்பொழுது என்னைப் பெற்ற தாய்மார் அனைவரும் உடல்களும் சலித்த. நான் ஊர்தோறும் நடந்தமையால் கால் சலித்துப் போனது; எனைப் பலமுறை படைத்தமையால் நான்முகனாகிய வேதா கை சலித்தான். இருப்பையூரில் வாழ்கின்ற பெருமானே! இன்னும் கருப்பையில் நான் தங்காமல் இருக்க அருள்வாய் என்ற கருத்தமைந்த பாடல்

**மாதா உடல்சலித்தாள் வல்லினையேன் கால்சலித்தேன்**
**வேதாவும் கைசலித்தான் விட்டானே - நாதா**
**இருப்பையூர் வாழ்சிவனே! இன்னும் ஓர் அன்னை**
**கருப்பையூர் வாராமல் கா.**

மாணிக்கவாசகர் பாடிய திருவாசகத்தில் இக்கருத்தைக் காணலாம்.

**பொல்லா வினையேன் புகழுமா(று) ஒன்(று) அறியேன்**
**புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்(து) இளைத்தேன் எம்பெருமான்**
**மெய்யேஉன் பொன்னடிகள் வீ(டு) உற்றேன்**

இந்தமண் நெருப்பு வானம் காற்று நீர் (ஆறு) ஆகிய எண்ணுவதற்கு அரிய ஐம்பூதங்களைப் படைத்த திருவையாற்றுக் கடவுளே! எவ்வித ஆதரவும் இன்றி யான் வாடுகின்றேனே என்று முறையிடுகிறார்.

**மண்ணும் மணல்ஆற வானும் புகைஆற**
**எண்ணரிய தாயும் இளைப்பாறப் பண்ணும்யான்**

**கையாற வும்அடியேன்நான் ஆறவும் காண்பாய்நீ**
**ஐயா! திருவை யாறா!**

என்னைப் பிடிக்க வரும் முன்னர் கண்பஞ்சடைந்து போகும் முன்னர் கடைவாய் வழியே செலுத்திய பால் வடியும் முன்னர் உயிரற்ற என் உடல்மேல் உற்றார் உறவினார் அழும் முன்னர் மனமே! ஈமத்தீயில் வைத்து எரிக்குமுன்னெர் திருக்குற்றால நாதனைக் கும்பிடு என்று கூறுகிறார்.

**காலன் வருமுன்னே கண்பஞ்ச டையுமுன்னே**
**பாலும் கடைவாய்ப் படுமுன்னே - மேல்விழுந்தே**
**உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே**
**குற்றாலத் தானையே கூறு.**

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## புலால் மறுத்தல்

**(ஊன் - உடம்பு - புலால் - மாமிசம் உண்ணுதலை விட்டுவிடுதல்)**

1. **தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊன் உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்.**

தன்ஊன் - தன்னுடைய தசை உடம்பை; பெருக்குதற்கு - பெருக்கச் செய்வதற்கு; தான்பிறிது ஊன் உண்பான் - தான், பிற உயிரின் உடம்பின் தசையைத் தின்பவன்; எங்ஙனம் ஆளும் அருள் - எவ்வாறு அருள் நிலையைக் கடைப்பிடிப்பான்.

தன்னுடைய தசை உடம்பைப் பெருக்கச் செய்வதற்குப் பிற உயிர்களின் உடம்புத் தசையைத் தின்பவன் உயிர்கள் மீது அருள் நிலையைக் கடைப்பிடிக்க மாட்டான்.

2. **பொருள் ஆட்சி போற்றாதார்க் கில்லை அருள் ஆட்சி**
**ஆங்குஇல்லை ஊன்தின் பவர்க்கு.**

பொருளாட்சி - பொருளால் வரும் பயனை அடைதல் ; போற்றாதார்க்கில்லை - அப்பொருளைப் பாதுகாக்காதவர்களுக்கு இல்லை ; அருளாட்சி - உயிர்கள் மீதுஉள்ள அருள் நிலைப் பயன்;

ஆங்கு இல்லை - அதுபோல இல்லை ; ஊன்தின்பவர்க்கு - ஊன் தின்பவர்களுக்கு.

பொருளைப் பாதுகாக்காதவர்களுக்குப் பொருளால் வரும் பயன் இல்லை ; அதுபோல ஊன் தின்பவர்களுக்கு அருள் நிலையால் பயன் இல்லை.

**3. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்**
**உடல்சுவை உண்டார் மனம்.**

படைகொண்டார் - கொலைக் கருவியைக் கொண்டவர்கள் ; நெஞ்சம் போல - மனத்தைப் போல ; நன்றூக்காது - அருளை நோக்க மாட்டாது ; ஒன்றன் உடல்சுவை உண்டார் மனம் - ஓர் உயிரின் உடல் தசையைச் சுவைத்து உண்டவரின் மனம்.

கொலைக் கருவியை ஏந்தியவர்களின் மனம் கொலையை மட்டுமே சிந்திக்கும் ; அதுபோல ஓர் உயிரின் உடலைச் சுவைத்து உண்பவரின் மனம் அருளை நோக்காமல் ஊன் தின்பதையே நினைக்கும். எனவே ஊன் உண்பவர் மனம் பிறர்க்கு நன்மை செய்யாது.

**4. அருள்அல்லது யாதெனின் கொல்லாமை கோறல்**
**பொருள் அல்லது அவ்வூன் தினல்.**

அருள்அல்லது யாதெனின் - அருள் தன்மை இல்லாதது எதுவெனில்; கொல்லாமை கோறல் - கொல்லாமை என்னும் பண்பைக் கொல்லுதல்; பொருள் அல்லது - பொருளற்ற வேண்டாத செயல் என்பது ; அவ்வூன் தினல் - உயிரைக் கொன்று அதன் உடலைத் தின்பது.

உயிரைக் கொல்லுதல் அருளற்ற செயலாகும்; ஓர் உயிரைக் கொன்று அதன் உடலைத் தின்பது பொருளற்ற செயலாகும்.

**5. உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண**
**அண்ணாத்தல் செய்யாது அளறு.**

ஊன் உண்ணாமை உள்ளது உயிர்நிலை - ஊன் உண்ணாதிருத்தலே உயிர் நிற்றற்குக் காரணமாக உள்ளது. ஊன் உண்ண - ஊனை உண்டால் ; அளறு - நிரயம் ; அண்ணாத்தல்

செய்யாது – தான் விழுங்கியவனை வெளியில் விடுதற்கு வாயைத் திறவாது.

உயிர் நிலைத்திருக்க ஊன் உண்ணாமை தான் காரணம்; மீறி ஊன் உண்டால் அவனை நரகம் விழுங்கும் ; மீண்டும் அவனை வெளியில் விடாது.

6. **தினற்பொருட்டாற் கொல்லாது உலகுஎனின் யாரும்**
**விலைப் பொருட்டால் ஊன்தருவார் இல்.**

தினற்பொருட்டால் – ஊனைத் தின்பதற்காக ; உலகு கொல்லாது எனின் – உலகத்தார் பிற உயிர்களைக் கொல்லவில்லை என்றால்; யாரும் – எவரும் ; விலைப் பொருட்டால் – விலைப்பொருள் காரணமாக ; ஊன்தருவார் இல் – ஊனை விற்பவர்கள் இல்லை.

ஊனைத் தின்பதற்காக உலகத்தார் பிற உயிர்களைக் கொல்லவில்லை என்றால் விலைப் பொருள் காரணமாக ஊனை விற்பவர்களும் இல்லையாவார்கள்.

7. **உண்ணாமை வேண்டும் புலா அல் பிறிதொன்றன்**
**புண்அது உணர்வார்ப் பெறின்.**

உண்ணாமை வேண்டும் புலாஅல் – புலாலை உண்ணாமல் விட்டுவிட வேண்டும் ; பிறிதொன்றன் புண் அது – அப்புலால் பிறிதோர் உடம்பின் புண் ஆகும் ; உணர்வார்ப் பெறின் – உணர்ந்து கொண்டால்.

புலால் என்பது பிறிதோர் உயிரின் புண் என்பதை உணர்ந்து கொண்டால் அப்புலாலை உண்ணாமல் விட்டுவிடுதல் வேண்டும்.

8. **செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்**
**உயிரின் தலைப்பிரிந்த ஊன்.**

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் – குற்றங்களினின்று நீங்கிய அறிவுடையவர்கள் ; உயிரின் தலைப்பிரிந்த ஊன் – ஓர் உயிரினின்று நீங்கிய ஊனை ; உண்ணார் – உண்ண மாட்டார்கள்.

குற்றங்களிலிருந்து நீங்கிய அறிவுடையவர்கள் பிறிதோர் உயிரிலிருந்து நீங்கிய ஊனை உண்ண மாட்டார்கள்.

9. **அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று.**

அவிசொரிந்து – தீயில் நெய்முதலான பொருள்களை ஊற்றி ; ஆயிரம் வேட்டலின் – ஆயிரம் வேள்விகளைச் செய்வதைக் காட்டிலும் ; ஒன்றன் உயிர் செகுத்து – ஓர் உயிரைக் கொன்று ; உண்ணாமை நன்று – உண்ணாதிருப்பதே நன்மையாகும்.

தீயில் நெய் முதலான பொருள்களை ஊற்றி ஆயிரம் வேள்விகளைச் செய்வதைக் காட்டிலும் ஓர் உயிரைக் கொன்று அதன் ஊனை உண்ணாதிருத்தலே நன்மையாகும்.

10. **கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்.**

கொல்லான் – உயிர்களைக் கொல்லாதவனை ; புலாலை மறுத்தானை – புலாலை உண்ணாதவனை ; கைகூப்பி எல்லா உயிரும் தொழும் – எல்லா உயிரும் கை குவித்து வணங்கும்.

உயிர்களைக் கொல்லாதவனையும் புலால் உண்ணாதவனையும் உலகத்து உயிர்கள் எல்லாம் கைகுவித்து வணங்கும்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

### கோவிலூர் மடாலயப் பள்ளிகளில் குழந்தைகள் தினவிழா

17.11.2017 அன்று கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் தொடக்கப்பள்ளி மற்றும் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளிகள் இணைந்து குழந்தைகள் தினவிழாவை நடத்தின. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசிஉரை வழங்கினார். மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி முதல்வர் மணிமொழிமோகன் வரவேற்றார். ஓய்வு பெற்ற மானாமதுரை நல்லாசிரியர் மோகனசுந்தரம் மந்திரமா தந்திரமா நிகழ்ச்சிகளை நடத்தினார். குழந்தைக்கவிஞர் பாலநடராஜன் பாடல்பாடிக் கதைகளைக் கூறிக் குழந்தைகளை ஆடிப்பாட வைத்தார். கோவிலூர் மடாலய அறநிலை உறுப்பினர் ராமனாதன் கோவிலூர் மடாலயக் கல்வி ஆலோசகர் டாக்டர் குமரப்பன் பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகளை வழங்கினார். பள்ளி ஆசிரியர்கள் இணைந்து கலை நிகழ்ச்சிகள் நடத்திக் குழந்தைகளை மகிழ்வித்தனர். மழலையர் தொடக்கப்பள்ளி உதவித் தலைமை

ஆசிரியை கௌரி நன்றி கூறினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, மாயாண்டி, மணிமொழிமுருகன், பேரா. சுப்பிரமணியன் பங்கு பெற்றனர். ஆயிரத்துக்கும் மேற்பட்ட குழந்தைகள் விழாவில் பங்கு பெற்றனர்.

25.11.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரித் தமிழ் உதவிப் போராசிரியர் டாக்டர். அ.சங்கரதாஸ் கழற்சிங்க நாயனார், இடங்கழி நாயனார், செருத்துணை நாயனார், புகழ்த்துணை நாயனார், கோட்புலி நாயனார் ஆகியோர் பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

**கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளியில் விளையாட்டு விழா**

30.11.2017 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி விளையாட்டு விழா நடைபெற்றது. பள்ளித் துணைமுதல்வர் வள்ளியம்மை வரவேற்றார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் விளையாட்டுப் போட்டிகளைத் துவக்கி வைத்து வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார். உடற்கல்வி ஆசிரியை திருமதி. சத்யா விளையாட்டுப் போட்டி அறிக்கையினை வாசித்தார். மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகள், யோகா, கராத்தே, பிரமிட் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கோவிலூர் மடாலய அறநிலை உறுப்பினர் கண்ணப்ப செட்டியார், மடாலயக் கல்வி ஆலோசகர் டாக்டர். குமரப்பன் வெற்றி பெற்ற மாணவ மாணவியருக்குப் பரிசுகளை வழங்கினார். பள்ளி முதல்வர் மணிமொழி மோகன் ஏற்பாடுகளைச் செய்திருந்தார். உடற்கல்வி ஆசிரியர் மதுசூதனன் நன்றி கூறினார். கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். ரவீந்திரன், டாக்டர். செல்லப்பா, மாயாண்டி, திருமதி. மணிமொழி முருகன் பங்கேற்றனர்.

**கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் பள்ளியில் விளையாட்டுப் போட்டி**

7.12.2017 அன்று கோவிலூரில் உள்ள முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி விளையாட்டு விழா கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி விளையாட்டு மைதானத்தில் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள்

தலைமையில் நடைபெற்றது. விளையாட்டுப் போட்டிகளைச் சிறப்பு விருந்தினர் தேவகோட்டை நகரத்தார் மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் வெங்கடாசலம் தொடங்கி வைத்து அணி வகுப்பு மரியாதையை ஏற்றுக்கொண்டார். போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பரிசுகளை வழங்கினார். உடற்பயிற்சி ஆசிரியை லெஜிதா வரவேற்றார். உடற்பயிற்சி ஆசிரியர் தனசேகர பாண்டியன் நன்றி கூறினார். மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் கத்திச்சண்டை, சிலம்பாட்டம் நடைபெற்றது. பள்ளித் தலைமை ஆசிரியை திருமதி. மணிமொழி முருகன், கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, மாயாண்டி, திருமதி. மணிமொழி முருகன் பங்கேற்றனர்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

அபிஷேக பாண்டியன் மனதிலே பக்தியும் பயமும் உண்டாகின. சித்தமூர்த்திப் பெரியாரை மதிக்காமல், சாதாரண மனிதரைப் போல் எண்ணி என்னிடம் வரச் சொல்லி அவமதித்து விட்டேன். என்ன மதியீனம் ! நான்தான் அவரை நாடிச் சென்று போகவேண்டும்; போய்த் தரிசனம் செய்ய வேண்டும் இதுவே முறை என்று நினைத்தான். அதே சமயத்தில் சித்தமூர்த்தியும் இந்திர விமானத்துக்கு வடமேற்கே எழுந்தருளி அமர்ந்திருந்தார். அன்று மாதப் பிறப்பு நாள்; மகரசங்கராந்தி புண்ணியகாலம். ஆதலால், அபிஷேக பாண்டியனும் திருக்கோவில் சென்றான். சோமசுந்தரப் பெருமானைத் துதித்து விட்டு பிரதட்சிணமாக வந்து கொண்டிருந்தான். அப்போது அரசனுக்கு முன்பு போய்க்கொண்டிருந்த மெய்க்காப்பாளர்கள் சன்னியாசிக் கோலத்தில் இருந்த சித்தரைப் பார்த்து, இந்த இடத்தை விட்டு எழுந்து போய்விடுங்கள் என்று கூறினார்கள். அதற்குள்ளாகப் பாண்டியன் அங்கே வந்து சேர்ந்தான். சித்தமூர்த்தியைப் பார்த்து யோகியாரே ! தங்கள் நாடும், ஊரும் எவை? தங்களுக்கு என்னவெல்லாம் வரும்? என்ன வேண்டும் தங்கள் திருப்பெயர் என்ன? சொல்லவேண்டுகிறேன் என்றான். அப்பனே ! நம்முடைய இடம் காசி. சிவனடியார்களே எனது

சொந்தக்காரர்கள் சித்து வித்தைகள் செய்து காட்டுவதே என்னுடைய வேலை மதுரை மக்களுக்குச் சித்துகள் காட்டி அவர்கள் விரும்புவதை அருள் புரிவோம். வேதம், கலைஞானங்கள் எல்லாம் எமக்குத் தெரியும். நான் உன்னிடம் பெற்றுக்கொள்ள வேண்டியது ஒன்றுமில்லை, பாண்டியா ! என மொழிந்தார் சித்தர் புன்னகையுடன்.

சித்தரின் கம்பீரமான பதிலைக் கேட்டு அவரது கருவத்தையும் வல்லமையையும் சோதிக்க விரும்பினான் பாண்டியன். அந்தச் சமயம் பார்த்து வேளாளன் ஒருவன் வளமாகப் பருதுது வளர்ந்திருந்த ஒரு கரும்பைக் கொணர்ந்து முன் வைத்து வணக்கம் செலுத்தினான். பாண்டியன் அந்தக் கரும்பைத் தன் கையில் வாங்கிக் கொண்டான். உடனே சித்த மூர்த்தியைப் பார்த்து, வல்லவர்களுக்கெல்லாம் வல்லவர் என்று மதித்துக் கொண்டலரே ! இதோ, பக்கத்திலுள்ள கல் யானைக்கு இந்தக் கரும்பை எடுத்துத் தின்ன வைத்து விட்டீர்களானால் எல்லாம் வல்ல சித்தர் தாங்கள் தாம்; சோமசுந்தரக் கடவுளும் தாங்கள்தாம், தாங்கள் விரும்பியதைக் கொடுப்பேன் என்றான். இது கேட்ட சித்தர் புன்னகை செய்தார். மன்னவா ! எமக்கு உன்னால் பயன் ஒன்றும் இல்லை. எல்லா வித்தைகளையும் அறிந்துள்ள எமக்கு எதிலுமே ஆசை கிடையாது. இதோ இந்தக் கல் யானை கரும்பைக் கடித்துக் தின்பதைப்பார் என்றார். சித்தர் பெருமான் கல் யானையின் மீது கடைக்கண் பார்வை செலுத்தி அருளினார். என்ன அற்புதம் ! கல்யானை கண் திறந்தது துதிக்கையை நீட்டியது; பாண்டியன் கைக் கரும்பைப் பற்றித் தனது வாய்க்குள் செலுத்திச் சாறு ஒழுகும்படிக்குக் கடித்துத் தின்றது. துதிக்கையை இங்குமங்கும் ஆட்டிக்கொண்டு நின்றது.

மறுபடியும் சித்த மூர்த்திப் பெருமான் யானையைக் கடைக்கணித்தார். உடனே யானை தனது துதிக்கையை வீசிப் பாண்டியன் கழுத்தில் போட்டுக்கொண்டிருந்த மணிமாலையை எட்டிப்பிடித்தது. மன்னனின் மெய்க் காவலர்கள் கோபங்கொண்டு வந்தனர். சித்தர் யானையைக் கோபத்தோடு பார்த்தார். உடனே கல்யானை மாலையை விழுங்கிவிட்டது. பாண்டியன் பெருங் கோபம் கொண்டான். மெய்க்காவலர்கள் மன்னன் கோபத்தை அறிந்ததும் சித்தர் பெருமானையே அடிக்கவந்துவிட்டனர். புன்னகை மலர்ந்த

திருமுகத்தோடு, நில்லுங்கள் என்றார் சித்தர். காவலர்கள் உடனே சிலை உருவம் போல அப்படியே ஆடாமல் அசையாமல் நின்று விட்டார்கள்.

அந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்ட பாண்டியனுக்குக் கோபம் விலகிவிட்டது. பக்தி நிரம்ப ஏற்பட்டது. சித்தமூர்த்திப் பெருமானின் திருவடிகளில் தன் முடி சேர்த்து வணங்கினான். மாயையால் மயங்கிப் பாசத்தால் கட்டுப்பட்டதாலே எளியேன் செய்த அபசாரக் குற்றத்தைப் பொறுக்க வேண்டும், மன்னித்தருள வேண்டும் என்று முறையிட்டுக் கொண்டான். கருணைக் கடலாகிய மூர்த்திகள் சந்தோஷம் அடைந்தார். உனக்கு வேண்டும் வரத்தைக்கேள் தருவோம் என்றார். அபிஷேகபாண்டிய அரசன் உடனே வணங்கி, பெருமானே ! எளியேனுக்கு நல்ல குமாரன் பிறக்கும் படி அருள வேண்டுகிறேன் என்று விண்ணப்பித்தான். சித்தர் பெருமான் அப்படியே ஆகட்டும் என்று நல் வரம் தந்தருளினார். பின்னர் யானையின் மேலே தனது திருக் கையை வைத்துக் கடைக்கண் செலுத்தினார். யானை தனது துதிக்கையை நீட்டிப் பாண்டியனிடம் அவனது கண்டமாலையைக் கொடுத்துவிட்டது. பாண்டியன் கையேந்தி மாலையை வாங்கினான். வாங்கி நிமிர்வதற்குள்ளாகச் சித்தமூர்த்தி மறைந்துவிட்டார். யானையும் தனது பழைய நிலைமையை அடைந்து மீண்டும் கல்லானை யாகிவிட்டது.

பேரற்புதத்தைக் கண்ட பாண்டிய மன்னன் பயந்து இந்தத் திருவியாடல் சோமசுந்தரப் பெருமானுடைய திருவிளையாடல்தான் என்பதைத் தெரிந்து கொண்டுவிட்டான். திருக்கோயில் கருவறைக்குள்ளே சென்று சொக்கலிங்கப் பெருமானைப் பணிந்து புகழ்ந்தான். இறைவனைச் சோதிக்கத் துணிந்த தனது புத்திக்கேட்டை எண்ணி அபராதம் செலுத்தினான்.

சித்தமூர்த்திப் பெருமான் அருளிய நல்வரத்தின் பயனாக அபிஷேக பாண்டியனுக்குப் புதல்வன் பிறந்தான். விக்கிரமன் என்று நாமகரணம் செய்து பெருவீரனாக்கி வளர்த்தான். உரிய காலத்திலே தன், மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்தான். சின்னாட்கள் சென்று சிவபரஞ் ஜோதியில் இரண்டற ஐக்கியமாகிவிட்டான்.

**Available Knitted Fabric** (On Order Basis)

| | |
|---|---|
| **18 GG Rib** | **Dia : 11 - 36** |
| **24 GG Single Jersey** | **Dia : 16 - 36** |
| **28 GG Single Jersey** | **Dia : 18 - 34** |
| **28 GG SJ Openwidth** | **Dia : 30 - 34** |

**Hosiery Yarn Available**

**P[illegible] PV / 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

## பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

M.Com., M.Sc., முதுகலை பட்டப்படிப்பிற்கு
அழகப்பா பல்கலைக்கழகத்தில் அனுமதி பெற்றுள்ளோம்.
மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**
**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**
**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**
**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**

Thirumagal
04565 - 232991